ஸ்ரீ காமாக்ஷியை நம:
ஸ்ரீ குருப்யோ நம:



# ஸ்ரீ குருபீடத்தையும் அன்னை காமாக்ஷியையும் நினைவிற் கொண்டு மனப்பாடம் செய்யவேண்டிய புனித வாக்யங்கள்





ஸ்ரீ குருபீடத்தையும் அன்னை

# காமாக்ஷியையும் நினைவிற் கொண்டு

மனப்பாடம் செய்யவேண்டிய புனித வாக்யங்கள்



श्रीः

## श्रीचन्द्रमौळीश्वर




स्वस्ति श्रीमदखिल भूमण्डलालंकारत्रयस्त्रिंशत्कोटि देवतासेवित-श्रीकामाक्षीदेवीसनाथ श्रीमदेकाम्रनाथ श्रीमहादेवीसनाथ श्रीहस्तिगिरि-नाथ साक्षात्कार परमाधिष्ठान सत्यव्रतनामाङ्कित काञ्चीदिव्यक्षेत्रे शारदा-मठसुस्थितानाम्, अतुलितसुधारसमाधुर्य कमलासनकामिनीधम्मिल्ल-सम्फुल्लमल्लिकामालिकानिष्यन्द मकरन्दझरीसौवस्तिक वाङ्निगुम्भविजृम्भ-णानन्दतुन्दिलितमनीषिमण्डलानाम्, अनवरताद्वैतविद्याविनोदरसिका-नाम्, निरन्तरालंकृतीकृतशान्तिदान्तिभूम्नाम्, सकलभुवनचक्र प्रति-ष्ठापक श्रीचक्रप्रतिष्ठाविख्यातयशोऽलंकृतानाम्, निखिलपाषण्डषण्ड-कोत्पाटनेन विशदीकृतवेदवेदान्तमार्ग षण्मतप्रतिष्ठापकाचार्याणां श्रीम-त्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छंकरभगवत्पादाचार्याणां चरणनलि-नाभ्यां नमो नमः ॥

श्रीः

# श्रीभगवत्पादबिरुदावलिः

ॐ

पटुपटहभेरीकाळाभाङ्गाळकटकनिस्साण-
वीणावेणुमृदङ्गादिसकलवाद्यविनोद ।
निखिलवाद्यघोषश्रवणकान्दिशीकविमतबृन्द-
कोलाहल ॥ पराकु स्वामिन् ॥ १ ॥

जय गोविन्दभगवत्पादपादाब्जषट्पद
जय जीवपराभेदवावदूकजगद्गुरो ।
जय भो बौद्धपाषण्डविध्वंसनविचक्षण
जय वेदान्तसिद्धान्तसिद्धाञ्जनमहामते ॥ पराकु स्वामिन् ॥ २ ॥

नित्यान्नदानलसमानघनापदान-
गानावदानभृशविस्मयमानलोक ।
भक्तिप्रकर्षपरिपूजितचन्द्रचूड-
कारुण्यलब्धनिखिलाभिमतार्थसिद्धे ॥ पराकु स्वामिन् ॥ ३ ॥

प्रस्थानतूर्यपटहानकशङ्खभेरी-
भंभंनिनादबधिरीकृतदिक्तटीक ।
अभ्यर्णदेशविनमन्निखिलावनीन्द्र-
मूर्धन्यरत्नरुचिरञ्जितमञ्जुलाङ्घ्रे ॥ पराकु स्वामिन् ॥ ४ ॥

कुंभीसंभवडिम्भजृम्भणदृढाहंभावमम्भोनिधे-
र्गांभीर्यं कुलकुंमिनीधरधृतिं जंभारिसंभावनाम् ।
अंभोदोद्भटनादमप्यपहसन् बंभ्रम्यते संभ्रमात्
भं भं भं भमितीड्यशंकरगुरोर्जैत्राङ्कशंखध्वनिः ॥ पराकु स्वामिन् ॥ ५ ॥

काञ्चीपुराभरणकामदकामकोटि-
पीठाभिषिक्तवरदेशिकसार्वभौम ।
सार्वज्ञ्यशक्त्यधिगताखिलमन्त्रतन्त्र-
चक्रप्रतिष्ठितविजृंभितचातुरीक ॥ पराकु स्वामिन् ॥ ६ ॥

स्वस्तिश्रीभुवनत्रयार्चितपदाम्भोजाततादृङ्महा-
तत्त्वज्ञाननिदानशंकरगुरोश्छात्रक्रमाधिष्ठिते ।
काञ्चीमध्यगशारदामठसुधीसिंहासने षण्मता-
चार्याराधितपादुको विजयते विश्वाधिकोऽस्मद्गुरुः ॥
पराकु स्वामिन् ॥ ७ ॥

अत्रैवर्गिकसंप्रदायपदवीसाम्राज्यसिंहासने
स्वैरारोहणकर्मजांघिकगुणग्रामाभिरामात्मने ।
वाणीकर्णवतंसहल्लकदलद्रोणीमिलद्वासना-
तत्त्वव्यञ्जकवाङ्मुखाय भगवत्पादाय मोदामहे ॥
पराकु स्वामिन् ॥ ८ ॥



# श्रीकामाक्षीस्तुतिः

कारणपरचिद्रूपा
  काञ्चीपुरसीम्नि कामपीठगता ।
काचन विहरति करुणा
  काश्मीरस्तबककोमलाङ्गलता ॥ १ ॥

कंचन काञ्चीनिलयं
  करधृतकोदण्डबाणसृणिपाशम् ।
कठिनस्तनभरनम्रं
  कैवल्यानन्दकन्दमवलम्बे ॥ २ ॥

ऐश्वर्यमिन्दुमौलेः
  ऐकात्म्यप्रकृति काञ्चिमध्यगतम् ।
ऐन्दवकिशोरशेखरम्
  ऐदम्पर्यं चकास्ति निगमानाम् ॥ ३ ॥

लीये पुरहरजाये
  माये तव तरुणपल्लवच्छाये ।
चरणे चन्द्राभरणे
  काञ्चीशरणे नतार्तिसंहरणे ॥ ४ ॥

कामपरिपन्थिकामिनि
कामेश्वरि कामपीठमध्यगते ।
कामदुघा भव कमले
कामकले कामकोटि कामाक्षि ॥ ५ ॥

समरविजयकोटी साधकानन्दधाटी
मृदुगुणगणपेटी मुख्यकादम्बवाटी ।
मुनिनुतपरिपाटी मोहिताजाण्डकोटी
परमशिववधूटी पातु मां कामकोटी ॥ ६ ॥

जय जय जगदम्ब शिवे
जय जय कामाक्षि जय जयाद्रिसुते ।
जय जय महेशदयिते
जय जय चिद्गगनकौमुदीधारे ॥ ७ ॥

जयविजयिनी भव ।

---



ஸ்ரீ ஆதி சங்கர பகவத்பாதர்கள்
—ஸ்ரீகாமாக்ஷீ கோயில், காஞ்சீபுரம்

ஸ்ரீகுருப்யோ நம:

ஏகதண்டத்துடன் அத்வைத ஸந்யாஸி சிஷ்யர்கள் நால்வர் பாதபீடத்தினடியில் கைகூப்பி நிற்கும் திருக்கோலத்துடன் நின்றிருக்க, பீடத்தின்மேல் புருஷப்ரமாண வடிவாக வீற்றிருக்கும் ஆதிசங்கர பகவத்பாத மூர்த்திக்கு நித்யம் செய்யப்படும் 24 அர்ச்சனை நாமங்கள்.

श्रीः

# श्रीशङ्करार्चननामावलिः

१. अष्टवर्षचतुर्वेदिने नमः ।

२. द्वादशाखिलशास्त्रविदे नमः ।

३. सर्वलोकख्यातशीलाय नमः ।

४. प्रस्थानत्रयभाष्यकृते नमः ।

५. पद्मपादादिसच्छिष्याय नमः ।

६. पाषण्डध्वान्तभास्कराय नमः ।

७. अद्वैतस्थापनाचार्याय नमः ।

८. द्वैतादिद्विपकेसरिणे नमः ।

९. व्याससन्दितसिद्धान्ताय नमः ।

१०. वादनिर्जितमण्डनाय नमः ।

११. षण्मतस्थापनाचार्याय नमः ।

१२. षड्गुणैश्वर्यमण्डिताय नमः ।

१३. सर्वलोकानुग्रहकृते नमः ।

१४. सर्वज्ञत्वादिभूषणाय नमः ।

१५. श्रुतिस्मृतिपुराणार्थाय नमः ।

१६. श्रुत्येकशरणप्रियाय नमः ।

१७. सकृत्स्मरणसन्तुष्टाय नमः ।

१८. शरणागतवत्सलाय नमः ।

१९. निर्व्याजकरुणामूर्तये नमः ।

२०. निरहंभावगोचराय नमः ।

२१. संशान्तभक्तहृत्तापाय नमः ।

२२. सर्वज्ञानफलप्रदाय नमः ।

२३. सदसद्वस्तुविमुखाय नमः ।

२४. सत्तासामान्यविग्रहाय नमः ।

---



## तोटकाष्टकम्

विदिताखिलशास्त्रसुधाजलधे
महितोपनिषत्कथितार्थनिधे ।
हृदये कलये विमलं चरणं
भव शङ्कर देशिक मे शरणम् ॥ १ ॥

करुणावरुणालय पालय मां
भवसागरदुःखविदूनहृदम् ।
रचयाखिलदर्शनतत्त्वविदं
भव शङ्कर देशिक मे शरणम् ॥ २ ॥

भवता जनता सुहिता भविता
निजबोधविचारणचारुमते ।
कलयेश्वरजीवविवेकविदं
भव शङ्कर देशिक मे शरणम् ॥ ३ ॥

भव एव भवानिति मे नितरां
समजायत चेतसि कौतुकिता ।
मम वारय मोहमहाजलधिं
भव शङ्कर देशिक मे शरणम् ॥ ४ ॥

सुकृतेऽधिकृते बहुधा भवतो
भविता समदर्शनलालसता ।
अतिदीनमिमं परिपालय मां
भव शङ्कर देशिक मे शरणम् ॥ ५ ॥

जगतीमवितुं कलिताकृतयो
विचरन्ति महामहसश्छलतः ।
अहिमांशुरिवात्र विभासि पुरो
भव शङ्कर देशिक मे शरणम् ॥ ६ ॥

गुरुपुङ्गव पुङ्गवकेतन ते
समतामयतां न हि कोऽपि सुधीः ।
शरणागतवत्सल तत्त्वनिधे
भव शङ्कर देशिक मे शरणम् ॥ ७ ॥

विदिता न मया विशदैककला
न च किञ्चन काञ्चनमस्ति गुरो ।
द्रुतमेव विधेहि कृपां सहजां
भव शङ्कर देशिक मे शरणम् ॥ ८ ॥

---



ஒவ்வொரு நாளும் ஸ்ரீகாஞ்சி அம்மையின் தர்சனம் ஸ்ரீகாஞ்சி க்ஷேத்திரத்திலேயே நித்தியவாஸம் செய்பவர்களுக்கு ஒருகால் கிடைக்கலாம். வெளியூர்களில் இருப்பவர்களுக்கும், காஞ்சி க்ஷேத்திரத்திலேயே வாஸம் செய்துகொண்டிருந்தாலும் ஏதாவது அசௌகரியத்தினுல் நித்திய தர்சனம் செய்ய முடியாவிட்டாலும், அம்மையை நித்தியம் தரிசிக்கவேண்டும் என்ற ஆவல் அவ்வித அடியார்களுக்கும் ஏற்படலாம்.

காஞ்சி க்ஷேத்திர மகிமையை விளக்கும் காமாக்ஷி விலாஸம் என்னும் ஸ்தல மான்மியத்தில், நித்தியம் தேவியைத் தரிசனம் செய்ய முடியாதவர்கள் அந்த மாகாத்ம்யத்தில் சொல்லப்பட்டுள்ள சில ஸ்லோகங்களை நித்யம் பாராயணம் செய்தால் நித்திய தரிசனம் செய்த மாத்திரத்தில் ஏற்படும் தேவியின் அருளைப் பெறலாம் என்று கூறியிருக்கிறது.

அவ்விதம் தேவியிடம் அன்பு கொண்ட அடியார்களுக்கு நித்திய தரிசன பலன் கிட்டுமாறு அந்த ஸ்லோகங்களை அர்த்தத்துடன் இந்தப் புத்தகத்தில் சேர்த்திருக்கிறது. காஞ்சியில் புண்யகோடியில் இருக்கும் ஸ்ரீ வரதராஜ ஸ்வாமியும், ருத்ரகோடியில் இருக்கும் ஸ்ரீ ஏகாம்ரேச்வரரும், காஞ்சி நகரத்திலுள்ள எண்ணிறந்த மற்றத் தேவாலய மூர்த்திகளும் தத்தம்

ரதோத்ஸவம் முதலிய விழாக்களிலெல்லாம் காமகோடியாம் காமாக்ஷி தேவியை வலம் வருகின்றனர்.

ஆன்மாக்கள் எல்லாரும் இவ்விதமான கேந்திர ஸ்தானத்தில் தாயை நித்தியம் வலம் வந்து தரிசிக்கும் பேற்றை, இங்கே கொடுத்துள்ள ச்லோகங்களைப் பாராயணம் செய்து பெற்று, தாயின் கருணையால் பாலை அருந்தி மகிழும் சேயைப் போல், என்றென்றும் அம்மையின் அருளுக்குப் பாத்திரராவோம்.

## कामाक्षीमाहात्म्यम्

स्वामिपुष्करिणीतीर्थं पूर्वसिन्धुः पिनाकिनी ।
शिलाह्रदश्चतुर्मध्यं यावत् तुण्डीरमण्डलम् ॥

मध्ये तुण्डीरभूवृत्तं कम्पा वेगवती द्वयोः ।
तयोर्मध्यं कामकोष्ठं कामाक्षी तत्र वर्तते ॥

स एव विग्रहो देव्याः मूलभूतोऽद्रिराड्भुवः ।
नान्योऽस्ति विग्रहो देव्याः काञ्च्यां तन्मूलविग्रहः ॥

திருப்பதி மலையிலிருக்கும் ஸ்வாமி புஷ்கரிணீ தீர்த்தம், துண்டீர மண்டலம் என்றும் தொண்டை மண்டலம் என்றும் வழங்கும் காஞ்சீ மண்டலத்துக்கு வடக்கு எல்லை. மஹாபலிபுரத்திலுள்ள கிழக்கு சமுத்திரம் கிழக்கு எல்லை. பினாகினீ என்று கூறப்பெறும் தென் பெண்ணை

யாறு தெற்கு எல்லை. குடியாத்தத்துக்கு அருகில் கல்லாறு—பாலாறு சங்கமத்தில் உள்ள **சிலா ஹ்ரதம்** (கல்மடு) மேற்கு எல்லை.

இந்தக் காஞ்சீ மண்டலத்தின் மத்ய பாகத்தில் கம்பா நதி, வேகவதீ நதி; இவ்விரு ஆறுகளுக்கும் இடையில் உள்ள புண்ணியப் பிரதேசமே **காம கோஷ்டம்** (காமகோட்டம்). அந்தக் காமகோஷ்டத்தில் காமாக்ஷி வீற்றிருக்கிருள்.

அந்தக் காமாக்ஷியே பார்வதி தேவியின் ஒரே மூல விக்கிரகமாவாள். காஞ்சீ மாநகரில் எந்தச் சிவாலயத்திலும் அம்பிகைக்கு மூல விக்கிரகம் கிடையாது.

---

குறிப்பு: नान्योऽस्ति विग्रहो देव्याः काञ्च्यां तन्मूलविग्रहः காஞ்சீ க்ஷேத்திரத்தில் சிவாலயங்கள் நிறைய இருக்கின்றன. ஒரு சிவாலயத்தில்கூட அம்பிகைக்குத் தனியாக கர்ப்பக்ருஹம் இல்லை. இந்த க்ஷேத்திர எல்லைக்கு வெளியில் ஒவ்வொரு சிவாலயத்திலும் அம்பிகைக்கு கர்ப்பக்ருஹம் இருக்கிறது. இந்த க்ஷேத்திரத்தில் மாத்திரம் இல்லாமல் இருக்கும் விஷயத்தை இந்த ச்லோகம் தெரிவிக்கிறது. ஒரு காலத்தில் கைலாஸம் முதலிய எல்லா உத்தம சிவ க்ஷேத்திரங்களினின்றும் அம்பிகை தனது சக்தியை ஆகர்ஷித்துக்கொண்டு, காயத்ரீ மண்டபத்தின் அடியிலுள்ள குகையிலிருக்கும் பிலாகாசத்தில் ஆகாய வடிவமாக அமர்ந்தாள். பிறகு பிரம்மா தவம் செய்து பிரார்த்திக்க, அந்தப் பிரார்த்தனைக்கு இணங்கித் தனது சக்தியை எல்லா உத்தம க்ஷேத்திரங்களுக்கும் அனுப்பி அங்கு ஸான்னித்ய

மாக இருக்குமாறு அனுக்கிரகித்தாள். ஆனல் எல்லாச் சக்திகளேயும் ஆகர்ஷித்ததற்கு அடையாளமாக இந்த க்ஷேத்திர எல்லேக்குள் உள்ள சிவாலயங்களில் மாத்திரம் தனது சக்தியைத் திருப்பி அனுப்பாமல் காம கோஷ்டத்திலுள்ள பிலாகாசத்திலேயே இந்த க்ஷேத்திரத்திலுள்ள எல்லாரும் பராசக்தியின் அருளேப்பெறும்படி ஸங்கல்பித்தாள். இந்த க்ஷேத்திரத்தின் எல்லேக்கு வெளியிலுள்ள எல்லா உத்தம க்ஷேத்திரங்களிலுள்ள சக்தியும் ஸ்ரீகாஞ்சியிலுள்ள காமகோட்டத்தினின்றே அம்பிகையின் ஸங்கல்பப்படி எழுந்தருளியதனுல் அந்த ஒவ்வொரு கோயிலிலுமுள்ள அம்பிகைக்குக் காம கோட்டம், காமகோட்டி, காமகோஷ்டம் என்னும் திருநாமமே ஆகம சாஸ்திரங்களிலும் சில்ப சாஸ்திரங்களிலும், அப்பர், சம்பந்தர், சுந்தரர் முதலிய சைவ நாயன்மார்கள் திருவாக்குகளிலும் சிலாசாஸன ரூபமான கல்வெட்டுக்களிலும் [**தென்னிந்தியக் கோயில் சாஸனங்கள், சென்னே அரசாங்கக் கீழைக்கலேச் சுவடி நிலே**யத்தினரால் பிரசுரிக்கப்பட்டது. பாகம் 1. 14-ஆம் நம்பர் 197, 267, 530, 539; பாகம் 2. 597, 598, 635, 1042, 1048, 1049; பாகம் 3. பகுதி 1. 1175, 1209; பாகம் 3. பகுதி 2. 1271-3.] காணப்பெறுகின்றன. இந்த ஒரு ச்லோகம், 1000-க்கு மேற்பட்ட வருஷங்களாக நாட்டில் காணப்பெறும் விசித்திரமான தெய்வ ஸான்னித்ய அமைப்புக்களுக்கெல்லாம் காரணமாக இருக்கிறது.

---

जगत्कामकलाकारं नाभिस्थानं भुवः परम् ।
पदपद्मस्य कामाक्ष्याः महापीठमुपास्महे ॥

*எந்த ஒரு பிராணியின் பிறப்புக்கும்* ***காம கலே(இச்சை)****யே காரணமாக அமைந்திருக்கிறது.*

ஸகல ஜீவராசிகளுக்கும் மூலகாரணமான பூதேவி யின் நாபிஸ்தானமே **ஜகத்காமகலாகாரம்** எனப்பெறுகிறது. பூதேவியின் கேந்திரமான அந்த நாபிஸ்தானமே காமகோஷ்டம் என்னும் ஞானவெளியாம் ஆகாசம். அந்த ஆகாசம் பூதேவிக்கு நாபியாக இருந்து கொண்டு, காமாக்ஷியின் திருவடிகளில் பாதபீடமாக அமைந் துள்ள ஒரு குஹை வடிவமான பிலத்தில் **காம கோஷ்டம்** என்ற பெயருடன் நிலேத்திருக்கிறது. ஒரு மரத்தின் அடிக்கட்டை, பட்டை, கிளே, இலே, பூ, பிஞ்சு, காய், பழம் இவற்றுக்கெல்லாம் அந்த மரத்தின் வேரிலிருந்தே நீர் சென்று எப்படிப் போஷித்து வளர்க்கிறதோ, தாயின் கர்ப்பத்தி லுள்ள குழந்தையை அந்தக் குழந்தையின் நாபிக் கொடிமூலம் தாயின் உணவு குழந்தையின் எல்லா அவயவங்களிலும் சென்று எவ்வாறு போஷித்து வளர்க்கிறதோ, அவ்விதமே பூதேவியின் நாபி ஸ்தானமான காஞ்சியிலுள்ள காமகோட்டம் என்னும் சின்மயமான (பிரபஞ்சத்திலுள்ள எல்லா அறிவும் ஒன்ருகத் திரண்டு நிற்கும்) ஆகாசம் பூதேவியின் குழந்தைகளான எல்லாப் பிராணிகளுக்கும் காரணமாக நின்று போஷித்தும் வளர்த்தும், ரக்ஷித்தும் வருகிறது. அறிவு படைத்த பிராணிகளான நாம் எல்லாரும், அந்தப் பிலத்திலுள்ள ஆகாய வடிவமான காம கோட்டத் தாயையே உபாஸிக்கிரேம், வழிபடு கிரேம். (இந்தப் பிலாகாச வடிவமான தாயே பிலாகாசத்தின் மேல் தளத்தில் ஒரு கையில் கரும்பு வில்லும், மற்ெருரு கையில் ஐந்து புஷ்பங்

களாலான அம்புகளும், மேல் இரண்டு கைகளில் பாசமும் அங்குசமும் தரித்தவளாகக் காட்சியளிக்கிருள். அந்த மூர்த்தியின் முன்னிலையில் நாற்பத்துமூன்று கோண வடிவமான ஸ்ரீசக்ர யந்த்ரமாகவும் விளங்குகிருள். தனது பக்கத்தில் ஒரு காலை மாத்திரம் ஊன்றிக்கொண்டு தபஸ் செய்யும் தபஸ் காமாக்ஷியாகவும் விளங்குகிருள்.

कामकोटिः स्मृतस्सोऽयं कारणादेव चिन्नभः ।
यत्र कामकृतो धर्मो जन्तुना येन केन वा ।
सकृद् वापि सुधर्माणां फलं फलति कोटिशः ॥

இந்தக் காமகோட்டத்தில் எந்த ஜீவனுனுலும் தனது அபீஷ்டம் நிறைவேறுவதை உத்தேசித்து எந்தத் தர்மத்தைச் செய்தாலும் அந்தத் தர்மமும் அதன் பயனும் கோடி கோடியாக வளர்கின்றன. இதனுலேயே இந்த ஸ்தானத்துக்கும் இங்கு ஸான்னித்யமடைந்துள்ள அம்பிகைக்கும் காமகோடி என்ற பெயர் விளங்குகிறது.

यो जपेत् कामकोष्ठेऽस्मिन् मन्त्रमिष्टार्थदैवतम् ।
कोटिवर्णफलेनैव मुक्तिलोकं स गच्छति ॥

இந்தக் காமகோட்ட ஸ்தானத்தில் எந்த ஒரு தெய்வத்தை உத்தேசித்து எந்த மந்த்ரத்தை ஒரு தடவை ஜபம் செய்தாலும் அந்த மந்த்ர அக்ஷரங்களைக் கோடி கோடி ஆவ்ருத்தி (தடவை) ஜபித்த பலனைக் கொடுக்கும். இங்கு ஜபித்தவன் அவசியம் முக்தியை அடைகிருன்.

योऽवसेत् कामकोष्ठेऽस्मिन् क्षणार्धं वा तदर्धकम् ।
मुच्यते सर्वपापेभ्यः साक्षाद्देवी नराकृतिः ॥

ஒரு கணப் பொழுதேனும் இந்தக் காமகோஷ்டத்தில் வஸிப்பவன் தான் செய்த எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறுன். அவ்விதம் விடுபட்ட புண்யாத்மாவிடம் தேவியின் ஸான்னித்யம் நிறைந்திருக்கும்.

गायत्रीमण्डपाधारं भूनाभिस्थानमुत्तमम् ।
पुरुषार्थप्रदं शंभोर्बिलाग्रं तन्नमाम्यहम् ॥

காயத்ரீ மண்டபத்துக்கு அடியில் குஹை (குடவறை) இருக்கிறது. அங்குள்ள ஆகாசமே பிலாகாசம். பராசக்தி அங்கு ஆகாச வடிவமாக ஸான்னித்யமடைந்துள்ளாள். குழி போன்ற அந்தப் பிலமே பூமிதேவியின் நாபிக்குழி. உடலில் நாபியே மத்யஸ்தானம். பூதேவிக்கு நாபியானதனுல் இதுவே பூமிக்குக் கேந்த்ரஸ்தானம். பூமியில் இந்தப் பிலத்தில் இருந்துகொண்டே பரதேவதை பூலோகத்தை அருள் பாலிக்கிறுள்.

பூமிக்குக் காஞ்சி மத்யஸ்தானம் என்பது, லௌகிக முறையில் சரித்திர வாயிலாகப் பூமியிலுள்ள அநேக கண்டங்களின் அமைப்பை ஆலோசித்துப் பார்த்தாலும், ஆஸ்திக உலகத்துக்குக் காஞ்சி கேந்த்ர ஸ்தானம் என்று வெளியாகிறது. சுமார் 1500 வருஷங்களுக்கு முன்பு, அநேக காலமாகச் சரித்திர அத்தாட்சிகளைக் கொண்டு, மேற்கே பாபிலோனியா முதற்கொண்டு வடக்கே

சைபீரியா முதற்கொண்டு, கிழக்கே தாய்லாந்து, கம்போடியா, தென்கிழக்கே பாலித் தீவு வரையுள்ள இந்தோனேஷியா இவை எல்லாம் வேத சாஸ்திர புராண இதிஹாஸ வழிபாடுகளும் ஆசாரங்களும் நிறைந்த நாடுகளாக இருந்தன என்று தெரிகிறது. இந்த ஆஸ்திக உலகத்தை மாத்திரம் எடுத்துக் கொண்டாலும் மோக்ஷபுரியான காஞ்சி கேந்த்ர ஸ்தானத்தில் இருப்பதாகக் கொள்ளலாம். ஆனுல் புராணத்தில் இந்த முறையில் சொல்லப்பெறவில்லை. பூமண்டலத்தையே தன் சரீரமாகக் கொண்ட பூமியின் அதிஷ்டான தெய்வமான பூதேவியின் உடலில் நாபியாக இருந்து, பூமியிலுள்ள எல்லாப் பிராணிகோடிகளையும் நடத்தி அருள் பாலித்துவரும் ஸ்தானம் காஞ்சி பிலாகாசம். இந்தப் பிலாகாசமே பராசக்தி. சம்புவான பரமசிவனுக்கு ஸர்வ யாக்யங்களுக்கும் காரணம் இந்தப் பிலாகாச ரூபமான பராசக்தியே. இந்தச் சக்தியைக் கொண்டே சிவம் சிவனுகிருர். இந்தப் பிலாகாசத்தையே யான் வணங்குகிறேன்.

यः कुर्यात् कामकोष्ठस्य बिलाभ्रस्य प्रदक्षिणम् ।
पदसंख्याक्रमेणैव गोगर्भजननं लभेत् ॥

இந்தக் காமகோஷ்ட பிலாகாசத்தை எவன் ஒருவன் பிரதக்ஷிணம் செய்கிருனே, அதாவது காயத்ரீ மண்டபத்தைச் சுற்றிச் சற்றுப் பள்ளமாக இருக்கும் பிராகாரத்தைப் பிரதக்ஷிணம் செய்கிருனே, அந்தப் பிரதக்ஷிணத்தின் ஒவ்வோர் அடிக்கும் ஒரு கோகர்ப்பத்தினின்றும் பிறந்த

மஹாபுண்யம் கிட்டுகிறது. தங்கத்திஞல் ஒரு பெரிய பசுவின் உருவைச் செய்து, அதற்குப் பிராணப் பிரதிஷ்டை செய்து, அதன் வாய்வழியாக நுழைந்து, அதன் பின்பக்கமாகப் பூமியில் பிறப்பது போல் இறங்குவது கோகர்ப்ப ஜனனம். ராஜரிஷிகளான சக்ரவர்த்திகளின் வம்சங்களில் பட்டாபிஷேகம் செய்விக்கப்பெற்று ஸிம்மாஸனம் ஏறும் முன்னர், இந்தக் கோகர்ப்ப ஜனன முறையில் மறுபிறப்புப் பிறந்து அதன் பின்னரே செங்கோல் பிடிப்பர். இன்றும், குடகினின்று மைசூர் ராஜ்யத்தில் காவேரி பிறக்கும் இடத்தில் ராமநாதபுரம் என்று ஒரு க்ஷேத்திரம் இருக்கிறது. அவ்விடத்தில் ஸ்ரீராமன் சிவப்ரதிஷ்டை செய்திருக்கிருர். அங்கு ஒரு கற்பாறை பசுவின் வடிவத்தில் நிற்கிறது. காவேரி அந்தப் பசுவின் உடலுக்குள் பிரவேசித்துப் பின்புறமாகக் கோகர்ப்ப ஜன்மம் என்னும் மறுபிறப்பை அடைகிருள். ஸ்ரீராமனும் இங்கே கோகர்ப்ப ஜனனம் அடைந்ததாக அந்த க்ஷேத்திர வரலாறு கூறுகிறது. ஒருகால் பொன்ஞலேயே கோவின் உருவத்தை அமைத்து அந்தப் பசுவினின்றே ஸ்ரீராமனும் காவேரியும், மறுபிறப்பு அடைந்த வரலாற்றைக் கொண்டே காவேரிக்குப் பொன்னி என்ற பெயர் உண்டாகியிருக்கலாம்.

विश्वकारणनेत्राढयां श्रीमत्त्रिपुरसुन्दरीम् ।
बन्धकासुरसंहर्त्रीं कामाक्षीं तामहं भजे ॥

எவளுடைய இமைதிறப்பதஞலும் மூடுவதஞலும் உலகம் உண்டாகி லயத்தை அடைகிறதோ

उन्मेषनिमिषोत्पन्न-विपन्नभुवनावलिः। *(லலிதா ஸஹஸ்ர நாமம்),* ஸூக்ஷ்மமான அந்தப் பிலாகாச ஸ்வரூபிணியான பராசக்தியே ஸ்தூல ரூபம் கொள்ளும்போது கரும்பு வில்லும் புஷ்ப பாண மும் பாசமும் அங்குசமும் கொண்டு, மாதுளைப் புஷ்பம் போலுள்ள காந்தியையுடைய மஹா த்ரிபுரஸுந்தரியாகிருள். அவளே ஸ்ரீகாமாக்ஷி. பராசக்தி ஒவ்வோர் உருவம் எடுத்த சமயத்தில் உலகத்துக்குக் கெடுதி செய்துகொண்டிருந்த ஒவ் வோர் அசுரனை மாய்த்து அருளிய முறையில், இந்தக் காமாக்ஷி உருவத்தில், பந்தகன் என்னும் அசுரனை ஸம்ஹரித்து உலகத்தைப் பாதுகாத் தாள். அவ்விதம் உலகத்தைப் பாலித்த அன்னையை நான் வணங்குகிறேன்.

पराजन्मदिने काञ्च्यां महाभ्यन्तरमार्गतः।
योऽर्चयेत् तत्र कामाक्षीं कोटिपूजाफलं लभेत्॥
तत्फलोत्पन्नकैवल्यं सकृत् कामाक्षिसेवया॥

ஸூக்ஷ்மமான ஆகாய ரூபத்திலிருந்து பரா சக்தி த்ரிபுரஸுந்தரி வடிவம் கொண்டு ஆவிர்ப்ப வித்த நாளாகிய பால்குன க்ருஷ்ண ப்ரதமை தினம் நம்முடைய சரீரத்தின் நடுவில் மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை உள்ள ஆறு ஆதார கமலங் களையும் ஸ்ரீசக்ரமாகப் பாவித்து அந்தர்யாகம் என்னும் முறையில் உள்ளத்தைக் கொண்டே பூஜை செய்து வழிபடும் ஸ்ரீவித்யோபாஸகர்கள் கோடி பூஜைகள் செய்த பலனை அடைவார்கள்.

அந்தக் கோடி பூஜா பலத்தினுல் கிடைக்கும் பிறப்பு இறப்பு அற்ற அகண்டானந்த ஒளியான கைவல்யம் ஸ்ரீகாமாக்ஷியை ஒரு தரம் ஸேவிப்பதனுலேயே கிடைக்கிறது.

त्रिस्थाननिलयं देवं त्रिविधाकारमच्युतम् ।
प्रतिलिङ्गाग्रसंयुक्तं भूतबन्धं तमाश्रये ॥

ஸ்ரீகாமாக்ஷியின் ஆலயத்தின் விஸ்தாரமான வெளிப் பிராகாரத்தில் பஞ்சதீர்த்தம் என்னும் திருக்குளம் உள்ளது. அந்தத் திருக்குளத்தின் ஒரு மூலையில் படித்துறையின் பக்கத்தில் இரண்டு பூதங்களின் உருவங்கள் உள்ளன. அந்தப் பூதங்களுக்கு இடையே, அந்தப் பூதங்களின் பின்பக்கத்தில், சற்றுத் தூரத்தில் ஒன்றின் மேல் ஒன்ருக மூன்று கர்ப்பக்ருஹக்கோயில்கன் இருக்கின்றன. அவற்றில் ஒரு கோவிலில் மஹாவிஷ்ணு நின்ற திருக்கோலத்துடன் காட்சியளிக்கிருர். மற்ருென்றில் உட்கார்ந்த ஸேவை. மற்ருென்றில் பள்ளிகொண்ட திருக்கோலம். அந்தப் பூதங்களினுல் மக்களுக்குப் பீதி ஏற்பட்ட காலத்தில், மஹாவிஷ்ணு அந்தப் பூதங்களைக் கட்டுப்படுத்தி, அங்கு மூன்று உருவத்தில் சேவையளிப்பதாக ஸ்தல வரலாறு. அவ்விடத்திலேயே இம் மூன்று மூர்த்திகளும் மூன்று சிவலிங்கங்களின் முடிகளை ஒட்டி அமைந்திருப்பதாகவும் வரலாறு. இம் மூன்று உருவங்களிலுள்ள பூதபந்தப் பெருமானை வணங்குகிறேன்.

---

Printed at The Liberty Press, Madras—1.

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் பல படங்களுடனும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

ரூ. பை.

1. ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—60
2. ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... .... 0—60
3. ஸ்ரீ ப்ரச்னோத்தர ரத்நமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... 0—25
4. ஸ்ரீ மூகபஞ்சசதீ — ஸம்ஸ்கிருத மூலமும் (தமிழுரையுடனும்) .... .... .... 2—50
5. ஸ்ரீ ஆனந்த ஸாகரஸ்தவம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் இங்கிலீஷ் அனுவாதமும் .... .... 0—87
6. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் .... 2—50
7. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்கிருதத்தில் .... .... 0—40
8. —ஷை—தமிழில் ச்லோகமும், நாமாவளியும்.... .... 0—30
9. ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்கிருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—87
10. விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்கிருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் .... 0—75
11. ஸ்ரீ சாந்தி விலாஸம்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—75
12. மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—62
13. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது 1—75
14. ஸ்ரீ துர்கா சந்த்ர கலாஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் அருளியது .... .... ... 0—50
15. ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது .... .... .... 0—75

**ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்**

4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-1

லிபர்ட்டி அச்சகம், சென்னை-1